REGD No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 812818 4 பக்கம் விலை 35 காசு

உழவன்

உழவனின் உள்ளத்திலே புயல் இருக்குமானல் வயலிலே வளம் காண முடியாது.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

ஒழுக்கம்

பிறருக்கு ஒழுக்கத்தைப் பற்றிச் சொல்வதை விடத் தன்னிடத்து அது எவ்வளவு இருக்கிறது என்று ஒவ்வொருவரும் நினைத்துப் பார்க்க வேண்டும்.

-தந்தை பெரியார்

மலர்: 4 சென்னை 30 8 80 சனி (★) ❋❋❋ (★) வெளியூர்: 31 8 80 ஞாயிறு இதழ் 292

## ப.உ.ச. கடிதம்

## பாவம், ஆசை யாரைவிட்டது?

பேரன்புடையீர்,

எண்ணித் துணியவேண்டும், துணிந்த பின் எண்ணுவது இழுக்கு என்று தமிழ்மறை செப்புகிறது- அம்மறைக்கு தான் ஒருவர் மட்டுந்தான் பொருள் கூறவோ, கதை புனையவோ உரிமை பெற்றவராகக் கூறிக்கொள்ளுபவர் நம் தலைமுறையில் உள்ளதை நீங்கள் அறிவீர்கள்.

வள்ளுவன் வாய்மையை வேறெவரேனும் விவரித்தால் "காகம்" "கூழாங்கல்" என்று அவர்களை அழைப்பார் தன்னை குயில்-வைரம் என்று புகழ்ந்துரைப்பார். தற்புகழ்ச்சியைப் பற்றி நாம் கவலைப்படத்தேவையில்லை ஆனால் பிறரை இகழ்ந்துரைக்கும் பண்பை மறப்பதற்கில்லை!

வரும் செப்டம்பர் பத்தாந்தேதி ஒரு கட்சி தமிழ்நாட்டில் அறப்போர் நடத்தப்போவதாக அறிவித்ததும் பத்திரிகைகளும் வானொலியும், தொலைகாட்சி நிலையமும் அந்தச் செய்தியை பெரிதுபடுத்தி இரண்டு நாட்கள் வெளியிட்டன!

மத்தியிலே ஆளுங்கட்சியோடு இன்னும் உறவு ஒட்டிக் கொண்டிருப்பதாலோ அல்லது தங்கள் அலுவலகத்தின் முன் போராடுவார்களோ என்ற பயத்தாலோ தெரியவில்லை.

போராட்டம் என்று அறிவித்து விட்டார்களே என்ன ஆகுமோ என்று நான் கூட உங்களைப் போல் பயந்து விட்டேன். "பயந்து விட்டான்" என்று கேலி செய்வார்கள் என்பதை நான் அறிவேன். முயல் பயப்படாமல் இருக்க முடியுமா? புலிவேட்டைக்குப் பராக் கூறிக் கொண்டு புறப்படும் பெரியவர் அல்லவா புறப்படுகிறார்?

திடீரென்று அந்தத் தலைவரின் குடும்ப ஏட்டில் (சென்னை 29-8-80) "நினைவூட்டும் நாளே தவிர போராடும் நாளல்ல" என்றும் "போராட்டம் நடத்தஅல்ல - போலி வாக்குறுதிகளை வழங்கியவர்களை பொதுமக்களுக்கு அடையாளம் காட்டத்தான்" என்றும் செய்திவெளியிட்டுள்ளார்! "25-8-80 சென்னையிலிருந்து வெளியான அதே ஏட்டில் 'உண்ணாவிரத அறப்போராட்டம்' என்று

(2-ம் பக்கம் பார்க்க)

## 2500 ஆசிரியர்கட்கு பதவி உயர்வு அளிக்க

# கழக அரசு திட்டம்

## அஞ்சல்வழி பயிற்சிக்குப்பின் தேர்வு

சென்னை, ஆக 30- ஹையர்கிரேட் ஆசிரியர்கள் 2 ஆயிரத்து 500 பேர்களுக்கு பதவி உயர்வு அளிக்க, புரட்சித்தலைவரின் கழக அரசு முடிவு செய்துள்ளது, இதற்காக அவர்களுக்கு அஞ்சல்வழி மூலம் பயிற்சி அளிக்கும் திட்டம் செப்டம்பர் 5-ந் தேதி தொடங்குகிறது.

இத்திட்டம் பற்றிய விவரம் வருமாறு:-

தமிழக கல்வித்துறையில் ஹையர்கிரேட் ஆசிரியர்களாக உள்ளவர்கள் செகண்டிரி கிரேட் ஆசிரியர்களாக பதவி உயர்வு பெற கழக அரசு வழி செய்துள்ளது.

முதல் கட்டமாக இத்திட்டத்தின் மூலம் 2 ஆயிரத்து 500 ஹையர் கிரேட் ஆசிரியர்கள், செகண்டிரி கிரேட் ஆசிரியர்களாக பதவி உயர்வு பெறுவார்கள்.

இத் திட்டப்படி 8வது வகுப்புவரை படித்துள்ள ஹையர்கிரேட் ஆசிரியர்களுக்கு அஞ்சல் மூலம் பயிற்சி அளிக்கப்படும்.

தமிழ், ஆங்கிலம் கணக்கு ஆகிய பாடங்களிலும் பாடபோதனை பற்றியும் பாடங்கள் அனுப்பப்படும்.

இந்த பாடங்களைப் பெறும் ஆசிரியர்கள் அதற்கான பதிலை எழுதி அனுப்பவேண்டும்.

இந்தப் பயிற்சி முடிந்த பிறகு, பேராசிரியர்கள் ஆங்காங்கே நேரில் சென்று பயிற்சி பெறும் ஆசிரியர்களை சந்தித்து நேரிலும் பயிற்சி அளிப்பார்கள்.

### 7 ஆயிரம் பேருக்கு...

இதன் பிறகு பயிற்சி பெற்ற ஆசிரியர்களுக்கு தேர்வுவைக்கப்பட்டுஅவர்கள் செகண்டிரிகிரேட் ஆசிரியர்களாக பதவி உயர்வுபெறுவார்கள் இப்பயிற்சிக்கான காலம் 6மாதமாகும்.

முதல்கட்ட பயிற்சியில் 2ஆயிரத்து 500 ஆசிரியர்கள் இத்திட்டத்தால் பயன்பெறுவார்கள் அதை அடுத்து 2-வதுகட்டமாக 5ஆயிரம் ஆசிரியர்களுக்கு இந்தப் பயிற்சி அளிக்கப்படும்.

இத்திட்டத்தை பள்ளிக் கல்வி இயக்கு நகரத்தின் சார்பில் தமிழ்நாடு கல்வி ஆராய்ச்சி மற்றும் பயிற்சி நிறுவனம் மேற்கொண்டுள்ளது.

ஆசிரியர் தினமான செப்டம்பர் 5-ந் தேதி இத்திட்டம் துவக்கப்படுகிறது.

தற்போது அளிக்கப்படும் இந்தப் பயிற்சியின் விளைவாக ஹையர்கிரேட் ஆசிரியர்கள் செகண்டிரி கிரேட் ஆசிரியர்களாக பதவி உயர்வு பெறுவதோடு, தொடர்ந்து அவர்கள் பதவி உயர்வு பெறவும் இதன்மூலம் வழி ஏற்படும என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## பெண் போலீசுக்கு ஆள் எடுப்பு

சென்னை, ஆக 30 பெண் போலீஸ் படையில் சேர சென்னையில் ஆள் எடுக்கிறார்கள். எஸ் எஸ் எல் சி தேறிய 157 செண்டிமீட்டர் உயரம் உள்ள பெயர்கள் சேரலாம். எடை 50கிலோ இருக்கவேண்டும். 8-9-80 காலை 6-30மணிக்கு சென்னை ராஜரத்தினம் ஸ்டேடியத்தில் பெண் போலீசுக்கு ஆள் தேர்வு நடக்கிறது.

போலீசில் சேர விரும்பும் ஆண்கள் 8வது வகுப்பு தேறி இருக்கவேண்டும். 168 செண்டிமீட்டர் உயரமும் மார்பளவு 86 செண்டிமீட்டரும் இருக்க வேண்டும்.

## கேள்வி- பதில்

கேள்வி: "அ.தி.மு.க. கட்சியினர் சட்டதிட்டப்படி.. (மன்னிக்கவும்) அங்கே சட்டமாவது திட்டமாவது ஒரு மண்ணாங்கட்டியும் கிடையாது" என்று தி.மு.க. கட்சித் தலைவரின் குடும்ப ஏட்டில் எழுதியுள்ளதைப் பார்த்தீரா?

பதில்: பார்த்தேன்! அ.தி.மு.க.வில் சட்டதிட்டம் உண்டா இல்லையா அது சர்ச்சைக்குரியது. ஆனால் "ஒரு மண்ணாங்கட்டியும் கிடையாது" என்று கூறி இருப்பது நூற்றுக்கு நூறு உண்மை அந்தச்சரக்கு இருக்குமிடம் தி.மு.க. தான்! அவர்களின் "காப்பிரைட்" உரிமை! யாரும் கேட்கவும் முடியாது- தரவும் முடியாது.

## வாழ்க நின் புகழ்!

சிரிக்க வைத்து-
சிந்திக்க வைத்து-
சீர் திருத்த
கருத்துக்களை
மக்கள்
சிந்தையிலே
ஏற்றிய
கலை மன்னரே
கலைவாணரே
கலை உலகில்
சரித்திரம் பேசும்
சாதனை படைத்த
நாயகரே...

நின் புகழ்
வாழ்க !

## வெள்ளம்: அலகாபாத் நகருக்கு ஆபத்து

அலகாபாத், ஆக. 30 வெள்ளத்தின் விளைவாக அலகாபாத் நகருக்கு ஆபத்து தோன்றியுள்ளது கங்கை, யமுனை நதிகளின் வெள்ளத்தின் விளைவாக தண்ணீரின் மட்டம் தொடர்ந்து அதிகரித்து வருகிறது இதன் விளைவாக நகரின் தாழ்வான பகுதிகள் தண்ணீரில் மூழ்கிவிட்டது.

## மதுரை மேயர் தேர்தல்

சென்னை, ஆக. 30 — மதுரை நகர மேயராக எஸ். கே. பாலகிருஷ்ணனும், துணை மேயராக நவநீத கிருஷ்ணனும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்

## சென்னைக்கு காவிரி நீர்

(3-ம் பக்கம்)

## மறதி மனிதருக்கு

டோஸ்-2

மொழிக்கொள்கையில் மவுனம் சாதிக்கும் கருணாநிதியாரே

உறவு காட்டும் அண்ணாச்சி!- உங்க உரிமைக்குரல் என்னாச்சு?

டோஸ்-3

வறுமைக் கோட்டுக்குக் கீழே உள்ளவர்கள் 5 கிலோ அரிசி வாங்கினால் ஒரு கிலோ அரிசி இலவசம் என்ற புரட்சித்தலைவரை கேலி பேசும் கருணாநிதியாரே!

அரிசி கேட்டு புலம்புகிற அண்ணாச்சி! அடிச்சி வச்ச கொள்ளை எல்லாம் எவனாச்சி?

டோஸ்-4

"கயிறு இங்கே தாலிக்குத் தங்கம் எங்கே?" என்ற புரட்சித்தலைவரை "ஜூன் 1-ம்தேதி கோட்டைக்கு வந்து கேள். கொடுக்கிறேன்" என்ற கருணாநிதியாரே!

"மறதி வியாதி" அண்ணாச்சி!- உங்க மமதை எல்லாம் என்னாச்சி?

டோஸ்-5

சீரணி என்ற பெயரால் பலரைக் கொள்ளை அடிக்க விட்ட கருணாநிதியாரே!

புலவருக்கு அண்ணாச்சி- கொடுத்த பணம் என்னாச்சி?

# முதல்வர்கள் மாநாடு: புரட்சித்தலைவர் கலந்துகொண்டார்

புதுடெல்லி, ஆக. 30- டெல்லியில் நடைபெறும் முதலமைச்சர்கள் மாநாட்டில் முதல்வர் புரட்சித்தலைவர் கலந்து கொண்டார். நிதி அமைச்சர் நாவலர் அமைச்சர் பண்ருட்டி ஆகியோரும் கலந்து கொண்டனர்.

தேசிய அபிவிருத்திக் கவுன்சில் கூட்டம் (முதலமைச்சர்கள் மாநாடு) டெல்லியில் இன்று தொடங்கியது.

மாநிலங்களில் செயல்படுத்தபட இருக்கும் திட்டங்கள் குறித்துஇக்கூட்டத்தில் ஆலோசிக்கப்படுகிறது.

இக்கூட்டத்திற்கு பிரதமர் இந்திராகாந்தி தலைமை தாங்கினர் முதல்வர் புரட்சித்தலைவர் உட்பட பல்வேறு மாநில முதலமைச்சர்கள் இதில் கலந்துகொண்டனர்.

நிதி அமைச்சர் டாக்டர் நாவலர், மின்சாரத்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் ஆகியோரும் கலந்து கொண்டனர்.

### ஜனாதிபதியுடன்

நேற்று மாலைகுடியரசுத் தலைவர் சஞ்சீவரெட்டியை முதல்வர் புரட்சித்தலைவர் சந்தித்துப் பேசினர்.

முதலமைச்சர்கள் மாநாடு நாளையும் நடக்கிறது.

## புரட்சித்தலைவர் உயரத்திற்கு மெழுகுவர்த்தி

திருநெல்வேலி, ஆக-30 திருநெல்வேலியிலுள்ள மேல குலசேகரன் பட்டினத்தில் இருக்கும் லூர்து மேரி என்பவர் கழகம் ஆட்சி பீடம் அமைத்தால் 40கிலோ எடையுள்ள மெழுகுவர்த்தியை புரட்சித்தலைவரின் உயரத்திற்கு செய்து ஆலயத்திற்கு அளிப்பதாக வேண்டியிருந்தார்.

முதல்வர் புரட்சித் தலைவர்வெற்றிபெற்றுகழகமே ஆட்சியை அமைத்ததால் வேண்டுதலின்படி பாளையங்கோட்டை ரோமன் கத்தோலிக் பிஷப் அலுவலகத்தில் மெழுகுவர்த்தி தயாரிக்கப் பட்டுள்ளது.

மணப்பாடு சிலுவை அய்யா ஆலயத்தில் வரும் 4ந்தேதியன்று மெழுகுவர்த்தியை செலுத்துகிறார் லூர்துமேரி.

# ப.உ.ச. முன்னிலையில் கழகத்தில் இணைந்த தி. மு. க. பிரமுகர்கள்

சோளிங்கர், ஆக. 30- சோளிங்கர் தொகுதி திமுக, இந்திரா காங்கிரஸ், ஜனதா தலைவர்கள் அக்கட்சிகளிலிருந்து விலகி பொதுச் செயலாளர் ப.உ.ச. முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர். அப்போது தொகுதி கழக சட்டமன்ற உறுப்பினர் சி.கோபால்உடனிருந்தார்

நீலகண்ட ராயபுரம் ஜனதா கட்சித்தலைவரும் விவசாயிகள் கூட்டுறவு சங்க முன்னாள் தலைவருமான நீலமேகம்சோளிங்கர் ஊராட்சி ஒன்றியஇந்திரா காங்கிரஸ் தலைவரும் ஊராட்சிஒன்றிய துணைப் பெருந் தலைவருமான சிராஜேந்திரன் சோளிங்கர் நகர முன்னாள் திமுக செயலாளர் இராதா கொண்டபாளையம்கிராம இந்திராகாங்கிரஸ்தலைவர் கிருஷ்ணபிள்ளை ஆகியோர் அக்கட்சிகளிலிருந்து விலகி பொதுச்செயலாளர் ப.உ.ச.முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

இவர்கள் விலகலைத் தொடர்ந்து ஆயிரக்கணக்கான தொண்டர்கள் அக்கட்சிகளிலிருந்து விலகி கழகத்தில் இணைகின்றனர்.

பொதுச் செயலாளர் ப.உ.ச. முன்னிலையில் இணைந்தபோது கழகசட்டமன்ற உறுப்பினர் சி, கோபால், நகர அமைப்பாளர் கே என் கிருஷ்ணன், துணை அமைப்பாளர் கே வி நாகரத்தினம் ஆகியோர் உடனிருந்தனர்.

# ப. உ. ச. கடிதம்

(1-ம் பக்க தொடர்ச்சி)

செய்தி வெளியாகியுள்ளதே'' என்று எந்தப் பத்திரிகையாளரும் அவரிடம் சுட்டிக்காட்டவில்லை! நம் தலைவர் இப்படி எதையாவது மாற்றிச் சொன்னால் விட்டிருக்கமாட்டார்கள். என்ன செய்வது எல்லாம் நம்ம ராசி!

**அறப்போர் என்று அறிவித்த 4-ஆம் நாள் போராடும் நாளல்ல 'நினைவுபடுத்தும் நாள்' என்று மாற்றிக்கொண்டது ஏன் என்றுஎவராவது கேட்டிருந்தால் "அடடா புறநானூற்று வீரவரிகள் மறந்து போயிற்று புலி வேட்டைக்குக் கிளம்பினேன். முயல் வேட்டையில் அல்லவா இறங்கி விட்டேன்?'' என்று கூறியிருந்தாலும் நாம ஆச்சர்யப்படுவதற்கில்லை.**

"வாக்குறுதி அளித்தது யாருக்கு-கேள்வி கேட்பது யார்? விருந்துக்கு அழைத்தது யாரை? இலை போடவில்லையா என்று சண்டை போடுவது யார்?'' என்று நாம் கேட்டதால் "நினைவுபடுத்தும் நாளே தவிர போராடும் நாளல்ல'' என்று மாற்றிக்கூறுகிறார்.

இலை போடவில்லையே என்று நினைவுபடுத்துகிறனே தவிர சண்டை போடவில்லை என்று சொல்கிறாரா என்று என்னைக் கேட்காதீர்கள்!

போலி வாக்குறுதிகளாம்-பொது மக்களுக்கு நினைவு படுத்தப் போகிறாராம்!

'விருந்துக்கு விநியோகித்ததாள் எப்படியோ பெற்ற ஒருவர்' 'போலி அழைப்பென்று' கூறி கூவுகிறார்!

**விருந்து சைவமா அல்லது புலாலா என்பது வேறு விவகாரம் இவர் ஏன் அவசரப்படுகிறார்? ஆசை யாரை விட்டது!**

"இரும்பு பிடித்தவன் கையும் சிரங்கு பிடித்தவன் கையும் சும்மா இருக்காது'' என்று சொல்லுவார்கள். இதைக்கேட்டவுடன் "எங்கள் தலைவர் கையில் இரும்பு இருக்கிறது. ஜாக்கிரதை'' என்று அந்தக் கட்சியின் தொண்டர்கள் பேசினால் "உங்கள் தலைவர் கையில் இரும்பா.... வலிப்புக்காகப் பிடித்துக் கொண்டிருக்கிறாரோ?''என்று நீங்கள் கேட்டுவிடுவீர்கள் என்பதை நான் அறிவேன். எது அவர் கையில் இருக்கிறதோ நானறியேன்.

**ஆனால் "கை" இருக்கிறது என்ற தைரியத்தில் சும்மா இருக்க முடியவில்லை அவரால்!**

சொல்லாததை இட்டுக் கட்டியும் சொன்னதைத் திரித்தும் கூறி தன்கட்சிக்கு உயிரோட்டம் ஊட்ட முயற்சிக்கிறார் என்றால் நாம் கவலைப்படவில்லை அல்லது தன் கட்சியில் மிச்சம்மீதி யார் உள்ளனர் என்று கணக்குப் பார்க்க இந்த நாளைக் கொண்டாடுவதனால் நமக்கு ஆட்சேபணையில்லை!

சென்னையில் பேச்சாளர்கள் கூட்டம்-திருச்சியில் பொதுக்குழு! நெல்லையில் மாநாடு!

இவ்வளவு நடத்தியும் சிலரைக் காணோம்! பிறகுதான் செப்டம்பர் பத்தாம் நாள்!

**'போராட்டம்' என்று அறிவித்தார். ஏதோ 'கிர்..முர்' என்று சத்தம் கேட்டது-அவ்வளவுதான் 'போராட அல்ல, நினைவு படுத்த' என்று அறிவிக்கிறார்.**

தன்கட்சியின் கணக்குப் பார்க்கும் நாள் என்றால் நமக்கு வருத்தமில்லை.

ஆனால் 'போலி வாக்குறுதிகள்' என்று கூறுவதால் தான் நாம் கவனிக்க வேண்டியுள்ளது.

போலி எது அசல் எது என்பதை நாட்டு மக்கள் நன்கறிவர்.

அந்த சோதனை நடந்து மாதம் மூன்று தான் ஆகிறது. அதற்குள் இத்தனை அவசரமா? பாவம் ஆசை யாரைவிட்டது?

அன்புள்ள

**ப. உ. ச.**

---

ரஷ்ய ஒலிம்பிக்கில் சாதனை புரிந்த

# ஆக்கி விளையாட்டு அணி தலைவருக்கு ரூ 15 ஆயிரம் பரிசு

தமிழக அரசு வழங்கியது

சென்னை, ஆக. 30-ஆக்கி விளையாட்டில் இந்தியாவுக்கு வெற்றியைத் தேடித் தந்த இந்திய ஆக்கி அணி கேப்டன் பாஸ்கரனுக்கு தமிழக அரசு ரூ 15 ஆயிரம் பரிசு அளித்துள்ளது.

அண்மையில் மாஸ்கோவில் நடந்த ஒலிம்பிக்விளையாட்டுப் போட்டியில் இந்திய ஆக்கி அணி வெற்றி பெற்றதுதெரிந்ததே.

16 ஆண்டுகளுக்குப் பிறகுஆக்கி விளையாட்டில் இந்தியா தங்கப்பதக்கம் பெற்றது குறிப்பிடத்தக்க சாதனையாகும்.

இந்த மகத்தானசாதனை கண்ட அணியின் தலைவராக தமிழகத்தைச் சேர்ந்த பாஸ்கரன் இருந்தார் அந்த சாதனை வீரர் பாஸ்கரனைப் பாராட்டி அவருக்கு தமிழக அரசு ரூ. 15 ஆயிரம் பரிசு அளித்துள்ளது.

கல்வி அமைச்சர் அரங்கநாயகம் இதை அறிவித்துள்ளார்.

இந்திய ஆக்கி அணியில் இடம் பெற்று இருந்த 16 வீரர்களுக்கும் தலா ரூ. ஆயிரம் அளிக்கப்படும் என்றும் அமைச்சர் அரங்கநாயகம் அறிவித்துள்ளார்.

---

பாண்டியன் போக்குவரத்துக் கழக அண்ணா தொழிலாளர் சங்கத்தினர் கழக பொதுச் செயலாளர் ப உ ச வை சந்தித்து வாழ்த்துப் பெற்றனர்.

சி ராமமூர்த்தி (பொதுச் செயலாளர் பி ஆர் சி) எஸ் நம்பிராஜன் (துணைத் தலைவர் அண்ணா தொழிற்சங்கப் பேரவை) வை பெருமாள் (பொதுச்செயலாளர் அண்ணா தொழிற்சங்கப் பேரவை) ஜி பத்மநாபன் (பொருளாளர்) ஆகியோர் படத்தில் உள்ளனர்.

---

கொட்டும் மழையில் ஊர்வலம்

அரக்கோணம் நகரில்

# அமைச்சர்விஜயசாரதிக்கு பாராட்டுக் கூட்டம்

அமைச்சர்கள் குழந்தைவேலு, முத்துசாமி பாராட்டு

**அரக்கோணம், ஆக. 30-அரக்கோணம் நகரில் அமைச்சர் விஜயசாரதியைப் பாராட்டி ஊர்வலம்-பொதுக் கூட்டம் நடந்தது. அமைச்சர் விஜயசாரதியைப் பாராட்டி, அமைச்சர்கள் குழந்தைவேலு, ஆர். முத்துசாமி பேசினார்கள்.**

அரக்கோணம் தொகுதியில் கழகத்தின் சார்பில் போட்டியிட்டு வெற்றி பெற்ற விஜயசாரதி அமைச்சரான பின்பு தொகுதி மக்களுக்குநன்றி அறிவிப்புக் கூட்டமும் பாராட்டு விழாகூட்டமும் அரக்கோணம் சி எஸ் ஐ. சென்ட்ரல் பள்ளி திடலில் நடை பெற்றது. முன்னதாக பிரமாண்டமான ஊர்வலம் நடந்தது. அலங்கரிக்கப்பட்ட ஜீப்காரில் அமைச்சர் விஜயசாரதி, தொகுதி அமைப்பாளர் ஏ எம் ரகுநாதன் ஆகியோர் சென்றனர்.

ஊர்வலத்தின் முன்னால் 25க்கு மேல் மோட்டார் சைக்கிள்களிலும், குதிரைகளிலும கழகத் தொண்டர்கள் கொடி படித்து வரிசைக்கு மூவர் வீதம் வரிசையாக சென்றனர் அதன் பிறகு, 100க்கு மேற்பட்ட சைக்கிள் ஊர்வலமும், அதற்குபிறகு டிராக்டர்கள் ஊர்வலமும அதற்கு பின்னால் பொய்கால் குதிரை ஆட்டமும், புலிஆட்டமும், நையாண்டி மேளம், கோலாட்டம் முதலியவையும் ஊர்வலத்தில் இடம்பெற்றன.

விழாவின் காரணமாக அரக்கோண நகரமே பெரிய விழாகோலம் பூண்டிருந்தது.

பத்துக்கும் மேற்பட்ட அலங்கார வளைவுகள் நகர எல்லையில் இருந்து அமைக்கப்பட்டிருந்தன,

கழகத் தொண்டர்கள் ஆங்காங்கே அமைக்கப்பட்டிருந்த வளைவுகளின் மீது இருந்து அமைச்சர் விஜயசாரதிக்கு ரோஜா பூக்களால் மலர் மாரி பொழிந்தனர். கூட்டம் நடைபெற்ற திடல் மின்விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அரக்கோணம் சுற்றியுள்ள கிராமங்களிலிருந்து ஏராளமான மக்கள் வந்திருந்தனர் அரசினர் ஆண்கள் உயர்நிலைப்பள்ளிக்கூடத்திலிருந்து எம் கந்தன் தலைமையிலும் முரளி பிரபாகரன் ஆர் ஆர் பாபு ஆகியோர் முன்னிலையிலும் புறப்பட்ட ஊர்வலம் அரக்கோணம் பஸ்நிலையம் அருகே வந்த போது மழை பிடித்துக் கொண்டது கொட்டும் மழையிலும் ஊர்வலம் கலையாமல் சென்றன.

## கொட்டும் மழை

இரவு 8 மணி அளவில் தொகுதி அமைப்பாளர் ஏ எம் ரகுநாதன் தலைமையில் துணை அமைப்பாளர் மொய்தீன்பாஷா முன்னிலையில் கூட்டம் நடைபெற்றது.

உள்ளாட்சித் துறை அமைச்சர் குழந்தைவேலு, போக்குவரத்துத் துறை அமைச்சர் எஸ். முத்துசாமி ஆகியோர் கலந்து கொண்டும் எ. விஜயசாரதியை பாராட்டிப் பேசினார்கள்.

மற்றும் புலவர் இந்திரகுமாரி சோளிங்கர் தொகுதி எம். எல். ஏ. கோபால். வந்தவாசி எம். எல் ஏ குப்புசாமி. விட்டல்பாபு டி மதுரை, சோமுமணி, நீலகண்டன், ஆகியோர் பேசினர்.

ஊர்வலம் சுந்தரவேல் லாட்ஜ் அருகே வரும் போது அண்ணா அம்பேத்கார் ஆகியோரின் சிலைகளுக்கு மாலை அணிவிக்கப்பட்டது.

அமைச்சர் விஜயசாரதியைப் பாராட்டி அமைச்சர் குழந்தைவேலு பேசியதாவது:-

67ல் ஆட்சி பொறுப்பை ஏற்றபோது அறிஞர் அண்ணா சொன்னார். ஆட்சி எப்படி இருக்க வேண்டும் கட்சி எப்படிஇருக்கவேண்டும் என்று ஆட்சி என்பது மேலே போட்டிருக்கும் துண்டை போன்றதுஎன்று அவர் கூறினார் கொள்கை என்ற வேட்டி அவிழ்ந்து விட்டால் மக்கள் எள்ளி நகையாடுவார்கள் ஆட்சி பெரிது அல்ல கொள்கை தான் பெரிது அதுஎத்தனை கோடி மக்களுக்கு பயன்படுகிறது என்பதை பார்க்க வேண்டும்.

இன்னும் 20 ஆண்டு காலம் கழக ஆட்சியை அசைக்க முடியாது புரட்சிதலைவர் ஆட்சிக்கு வந்த பிறகு தவறாமல் மழை பொழிகின்றது. செயற்கை மழை திட்டத்தில் ஒரு கோடி ரூபாயை அழித்தவர் கருணாநிதி.

அமைச்சர் விஜயசாரதிக்கு பாராட்டுகளை தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.

அமைச்சர் முத்துசாமி பேசும்போது கூறியதாவது:-

நாடாளுமன்ற தேர்தலில் கழகம் குறைந்த ஓட்டுகளை பெற்றதால் மத்தியில் அமைந்த இந்திரா அரசு எங்களது ஆட்சியை தூக்கி எறிந்தது. தூக்கி எறிந்த ஆட்சியை தமிழக மக்கள் மீண்டும் ஆட்சியில் அமர்த்தினர்.

ஒருவேளை தி.மு.க. இ. காங்கிரஸ் கூட்டணி தேர்தலில் வெற்றி பெற்றிருந்துஆட்சிஅமைத்திருந்தால் அமைச்சரவை கூட்டத்தை அமைச்சரவையில் கூட்டி வருங்கால திட்டங்களையும தேர்தல் வாக்குறுதிகளைநிறைவேற்ற ஆலோசனைகள் செய்ய மாட்டார்கள்.

கருணாநிதி வீட்டில் அமைச்சரவையை கூட்டி தேர்தலில்யார்யார் நமக்கு எதிராக வேலை செய்தார்கள் என்று ஆலோசனை செய்து பழி தீர்ப்பார்கள் தமிழக நலனில் அக்கறை இல்லாத கருணாநிதி இப்போது ஜாதி பிரிவினையை தூண்டுகிறார்.

இவ்வாறு அமைச்சர் முத்துசாமி பேசினார்.

---

# நெல்லையில் நிதியமைச்சர் டாக்டர் நாவலர் பேசுகிறார்

இடம்: கைலாசபுரம் அண்ணாசிலை சமீபம்;

நாள்: 2-9-80 செவ்வாய் மாலை 7 மணி,

தலைமை: பி. சுல்தான்.

பேசுவோர்:

நிதியமைச்சர் **டாக்டர் நாவலர்**

வி. கருப்பசாமி பாண்டியன் எம். எல், ஏ. எம். பி, அழகியநம்பி, கே. ஆர். பி. மணிமொழியன், இளமதி, நம்பிராசன், பாளை. நாராயணன், முத்தையா, பொன்னுதுரை, எஸ். எம். எஸ். சாவி மற்றும் பலர்.

---

# கழகச் செய்திகள்

### நெல்லிகுப்பம்

31 8 80ஞாயிறு மாலை 7மணி அளவில் நெல்லிக்குப்பம் அண்ணா திடலில் கழக பொதுக்கூட்டம் இரா கோபாலகிருஷ்ணன் தலைமையில் பேசுவோர் வலம்புரி ஜான் துரை அன்பரசன் இரா சாமப்சிவம் சீனு ஜெயராமன், கி சாமிநாதன், ஏ ஏ ஹமீது. அ வேணு. சு சந்சலமல், எம் ஜல்லு மற்றும் பலர்.

### மதுரை

1-9-80 திங்கள் மாலை 7 மணிக்கு இஸ்மாயில்புரம் முனிச்சாலையில் சிகாமணி தலைமையில் பேசுவோர்;

அமைச்சர் காளிமுத்து பொ அன்பழகன் எம். பி, மதுரை பாண்டியன், வெ பாலகுரு, சந்தானம், லட்சுமி நாராயணன், ரத்தினம்இளவரசன்கிருஷ்ணமூர்த்தி மற்றும் பலர்.

### சித்தமல்லி

3-9-80 புதன் மாலை 6 மணிக்கு அண்ணாசிலை அருகில் பி முத்துகண்ணு தலைமையில் பேசுவோர்.

கேரளசுந்தரம் அழகு திருநாவுக்கரசு சுந்தரராசன், மகாலிங்கம் வைரவநாதன், பி. எம். வடிவேல், இளங்கோ ராமமூர்த்தி ராமசாமி மற்றும் பலர்.

### ஆரணி

6-9-80 சனி பகல் 2 மணிக்கு கோட்டை கைலாசநாதர் கோவிலில் வி. அர்ச்சுணன் தலைமையில் அமைப்பாளர்கள் கூட்டம்.

பங்குபெறுவோர்: ஏ.சி சண்முகம் எம் எல். ஏ. எம். பெருமாள், சின்னக் குழந்தை மற்றும் பலர்.

---

பொதுச் செயலாளர்

ப. உ. ச. முன்னிலையில்

# ஸ்டான்லி மருத்துவ கல்லூரி மாணவர்கள்: கழகத்தில்இணைந்தனர்

சென்னை, ஆக. 30-சென்னை ஸ்டான்லி மருத்துவக் கல்லூரி மாணவர்கள் 100 பேர் பொதுச் செயலாளர் ப. உ. ச. முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

பொதுச் செயலாளர் ப.உ.ச.வுக்கு மாணவர் தலைவர் டாக்டர் என் சுகுமார், பொதுச்செயலாளர் டாக்டர் என் மோகன் ஆகியோர் மாலைஅணிவித்தனர்.

மருத்துவக் கல்லூரி மாணவர்கள 100பேர் பொதுச் செயலாளர் ப.உ.ச.வுக்கு மாலை அணிவித்து கழகத்தில் இணைந்தனர்,

மாணவர் தலைவருடன் மருத்துவக் கல்லூரி மாணவர் சங்கநிர்வாகிகள் டாக்டர் பாலசுப்பிரமணியம் டாக்டர்கள் பி மோகன், என் ரஞ்சன், கே எம் டாமினிக ஜோஸ், ஜெகதீசன், எஸ் ராஜா, கே ராமநாதன். ஜி மாதவன் ஆகியோர் முதல்வர் புரட்சித்தலைவரிடம் ஆசி பெற்றனர்.

---

மன்னார்குடியில்

# அமைச்சர் ஹண்டேவிற்கு வரவேற்பு

மன்னார்குடி, ஆக. 30-மன்னார்குடியில் தமிழக நல்வாழ்வுத்துறை அமைச்சர் ஹண்டேவிற்கு தமிழ்நாடு அரசு அலுவலர்கள் (சி மற்றும் டி பிரிவு) சார்பாக கிளை நிர்வாகிகள் மாலை அணிவித்து வரவேற்றனர் அங்குள்ள மருத்துவமனையில் அரசு ஊழியர்களுக்கு தனியாக சிகிச்சை பிரிவும் வார்டும் அமைக்க வேண்டும் என்று அமைச்சரிடம் கேட்டுக் கொண்டனர் ஆவன செய்வதாக அமைச்சர் அவர்களுக்கு பதிலளித்தார்.

---

நந்தம்பாக்கம்

# குடிநீர் திட்டம்: விரைவில் முடிக்க தீவிர ஏற்பாடு

ஈ. ஆர். கிருஷ்ணன் தகவல்

சென்னை, ஆக. 30-நந்தம்பாக்கத்தில் 15 ஆயிரம் மக்கள் பயன்பெறும் வகையில் 1லட்சம் லிட்டர் கொள்ளளவு உள்ள மேல்நிலை நீர்த்தேக்க தொட்டி விரைவில் கட்டப்படும் என்று தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத் தலைவர் ஈ. ஆர். கிருஷ்ணன் தெரிவித்துள்ளார்.

தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத்தலைவர் ஈ. ஆர் கிருஷ்ணன் ஆலந்தூர் தொகுதி சட்டமன்ற உறுப்பினர் கே எம் அப்துல்ரசாக்மற்றும் சென்னை செங்கற்பட்டு வட்ட கண்காணிப்புபொறியாளர்கள்ஆகியோர் நந்தம்பாக்கத்தின் குடிநீர் பிரச்சனை குறித்து நடவடிக்கை எடுக்க அப்பகுதியை பார்வையிட்டனர்.

சுமார் 15 ஆயிரம் பேர் குடியிருந்து வரும் இப்பகுதியில் அனைவருக்கும் குடிநீர் வசதி செய்து தர குடிநீர் வடிகால் வாரியம் ஒரு புதிய நீர்தேக்க தொட்டியை கட்ட திட்டமிட்டது.

இந்த புதிய திட்டத்தால் அப்பகுதியில் வாழும் 15, ஆயிரம் மக்கள் முழுமையாக பயனடைவார்கள். இத்திட்டம் 2கிலோ மீட்டர் தூரத்திலிருந்து குழாய்கள் மூலம் குடிநீர் கொண்டு வரப்பட்டு ஒரு லட்சம் லிட்டர் கொள்ளளவு உள்ளமேல்நிலைநீர்த்தேக்க தொட்டியில் நிரப்பப்படும்.

இதன் மூலம் அங்குள்ள 14 தெருக்களும், கணபதிபுரம், துளசிங்கபுரம் ஆகிய பகுதிகளுக்கு குடிநீர் எந்த வித கஷ்டமும் இல்லாமல் கிடைக்கும்.

இத்திட்டத்தை விரைவில் முடிக்க வாரியப் பொறியாளர்கள் தீவிர நடவடிக்கை மேற் கொண்டுள்ளனர். இத்திட்டத்தால் இப்பகுதியில் குடிநீர் பிரச்சனை முழு அளவில் தீர்க்கப்படும்.

இவ்வாறு ஈ. ஆர் கிருஷ்ணன் தெரிவித்துள்ளார்.

---

தொழிலாளர்களின் குழந்தைகளுக்கு

# ஏலக்காய் வாரியம் உதவி பணம்

சென்னை, ஆக. 30-தமிழ்நாடு, கேரளா, கர்நாடகம் ஆகியபகுதிகளில் ஏலக்காய் தோட்டங்களில் வேலை செய்யும் தொழிலாளர்களின் குழந்தைகளுக்கு 1980-81-ஆம் ஆண்டில் படிப்பிற்கான உதவிப் பணத்தை ஏலக்காய் வாரியம் வழங்குகிறது. மாதம் ரூ 500க்கு மேற்படாத தொழிலாளர்களின் பிள்ளைகள் மட்டுமே இப்பண உதவியை பெற விண்ணப்பிக்கலாம் செயலாளர், ஏலக்காய்வாரியம் கொச்சி 682018 என்ற விலாசத்திற்கு விண்ணப்பம் செப்டம்பர் மாதம் 15ந்தேதிக்குள் அனுப்பவேண்டும்.

---

# கழக உறுப்பினர் அட்டை வழங்குதல்

கீழ்க்கண்ட ஊர்களுக்குச் சம்பந்தப்பட்ட அமைப்பாளர்கள் முகவரிக்கு உறுப்பினர் அட்டைகள் அஞ்சல் மூலமாக அனுப்பிவைக்கப்பட்டுள்ளன.

அமைப்பாளர்கள் உறுப்பினர் அட்டைகளை முறையாக கழக உறுப்பினர்களுக்கு உடனடியாக வழங்கிட வேண்டும்.

உறுப்பினர் அட்டைகள் வழங்குவதில் எவ்விதக் குறைபாடுகளும் இல்லாமல் செயல்படுவது அமைப்பாளர்களின் பொறுப்பாகும். வழங்க மறுத்தால் அமைப்பாளர்கள் மீது கடுமையான முறையில் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படும் உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் உறுப்பினர் அட்டையைப் பாதுகாப்பாக வைத்திருக்கவேண்டும்.

உறுப்பினர் சேர்க்கப்பட்டுள்ள உறுப்பினர் தாள்களையும் உரிய தொகையையும் உடனடியாக தலைமை நிலையத்திற்கு அனுப்பிவைக்குமாறு பொறுப்பானவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

எம். எஸ். அப்துல்காதர்
தலைமை நிலையச் செயலாளர்;

## மதுரை மாவட்டம்

### சின்னமனூர் ஒன்றியம்

ஆர் இராதாகிருஷ்ணன் - சீப்பாலக்கோட்டை
ஈ இராஜபாண்டியன் - பொட்டிப்புரம்
செல்லம் (என்ற) வெளியப்பன் - முத்துலாபுரம்
சு முருகன் - சின்னசாமகவுண்டன்பட்டி
எஸ் ஆர் சுருளிநாதன் - எல்லப்பட்டி
எல் பெருமாள் - கல்லபட்டி
ரெ கருப்பையா - எரக்கோட்டைபட்டி

ரா ராமையா - அய்யம்பட்டி
எஸ் தொத்தன் - எரவங்கல்லார் எஸ்டேட்
ஏ வீரபுத்திரன் - புலிகுத்தி
ஏ வி ஜெயக்குமார் - சின்னமனூர்
மு திருமலைச்சாமி - எாசக்கநாயக்கனூர்
கோ திருவேங்கடம் - சங்கராபுரம்
கே கணபதி - வெம்பக்கோட்டை
கா பெரியசாமி - காமாட்சிபுரம்
க நடராஜன் - எஸ் அழகாபுரி
கே எஸ் இராமர் - முத்துகிருஷ்ணாபுரம்

### பழனிஒன்றியம்

மா வேலுச்சாமி - 35வது வட்டம்
கே கருப்பணன் - குமராயிபுதூர்
கந்தசாமி - பச்சளநாயக்கன்பட்டி
ஆர் மாரியப்பன் - குரும்பட்டி
கா தங்கவேலு - கோதைமங்கலம்
மல்லையா - கொல்லபட்டி
ஏ சபாபதி - வில்வாதம்பட்டி
பி தெண்டபாணி - குப்பம்பாளையம்
ஏ பழனிச்சாமி - குட்டில்நாயகன்பட்டி
எஸ் பன்னீர்செல்வம் - பாப்பம்பட்டி
க பொ பழனிச்சாமி - ஏ கலையம்புத்தூர்மேற்கு தெரு
ஏ எஸ் மணி - பழனி
வி கே சிவராஜ் - கணக்கன்பட்டி
பி ரவிக்குமார் - பாலசமுத்திரம்
கே வெள்ளைச்சாமி - கலிக்கநாயக்கன்பட்டி
எஸ் பி சாமி - கூத்தம்பூண்டி
எம் மங்கலம் - எகலையம்புத்தூர்
சி எஸ் பழனியப்பன் - 11-வது வட்டம்
இரா மயில்சாமி - சிவரக்கோட்டை

### ஆண்டிப்பட்டி ஒன்றியம்

என் ஆண்டி - சக்கரைப்பட்டி
எம் பி சிவனாண்டி - சாவடிப்பட்டி
இரா திருமல்ராஜ் - கொப்பயம்பட்டி
வ வரதராஜ் - தெற்குபொன்னம்படுகை
அ பகவதிதேவர் - மந்திச்சுனை
அ சு கந்தசாமி - டி சுப்புலாபுரம்
துரைப்பாண்டியன் - டி வி ரெங்கநாதபுரம்
ராமர் - கணேசபுரம்
எம வி மெய்யப்பன் - தெய்வேந்திரபுரம்
வி ஆர் ஜெகநாதன் - அண்ணாநகர்
கு செல்லையா - டி செலலாயிபுரம்
பி கே இலட்சுமணன் - துரைசாமிபுரம்
பெருமாள் - அம்மாபுரம்
சி கலையரசன் - பாலக்கோம்பை
ப கணேசன் - குப்பாம்பட்டி
ச நாகபிள்ளை - ஜெயமங்கலம்
ஓ முத்து - ஜெயமங்கலம்
எம் ஆர் பெருமாள்சாமி - லட்சுமிபுரம்
ப பெரியகருப்பன் - வாழிப்பாறை
ச வனராஜ் - தனிப்பாறை
கு கந்தசாமி - கன்னியப்பிள்ளைபட்டி
கே பின்னத்தேவர் - தெய்வேந்திரபுரம்
எஸ் ராஜிதேவர் - செங்குவார்பட்டி
சு ராஜி - சித்தார்பட்டி

### கொட்டாம் பட்டி ஒன்றியம்

என் அழகர்சாமி - மேலவளவு
கே சின்னராஜலிங்கம் - குமுட்ராம்பட்டி
பி மணிமுத்து - வலைச்சேரிபட்டி
பி பால்ச்சாமி - கச்சிராயன்பட்டி
எம் லெட்சுமணன் - கொட்டாம்பட்டி
ப நல்லதம்பி - தும்பைப்பட்டி
ஆர் முனுசாமி - பள்ளபட்டிகிராமம்
மா தங்கராஜ் - திரவி
சார்லஸ்-பொன்னையா - பச்சகொம்பன்பட்டி

### பெரியகுளம் ஒன்றியம்

டி எம் நாகமாணிக்கம் - தாமரைக்குளம்
எம் வீராச்சாமி - பாப்பம்பட்டி
ஜீ சத்தியநாதன் - பெரியகுளம்
ச சட்சுமணன் - விஜயபுரம்
ஆர் மார்யப்பன் - பாலசமுத்திரம்
கே பண்ணைசேதுராமன் - பெரியகுளம்
பி எஸ் இராமையா - தும்மக்குண்டு
ச மகாலிங்கம் - விஸ்வநாதபுரம்
கா ஜமால்மைதீன் - பொம்மிநாயக்கன்பட்டி
ப கண்ணன் - 3வது வட்டம்

### திண்டுக்கல் ஒன்றியம்

என் மதார்சா - பேகம்பூர்
பெ சண்முகம் - 16வதுவட்டம்
பி எஸ் ராஜேஸ்குமார் - தாழைக்கடை
எஸ் சீனிவாசன் - பாப்பனம்பட்டி
பி ராமசாமி - பாலமரத்துப்பட்டி

மற்ற மாவட்ட, தொகுதி, ஒன்றியங்களில் உள்ள கிளைகளுக்கு உறுப்பினர் அட்டைகள் அனுப்பப்பட்டு வருகின்றன.

# சென்னைக்கு காவிரி நீர்

## கழக அரசு தீவிர பரிசீலனை

சென்னை, அக். 30-சென்னை நகருக்குக் காவிரி நீர் கொடுக்கும் திட்டம் பற்றி கழக அரசு தீவிரமாகப் பரிசீலித்து வருகிறது.

சென்னைக்கு குடிநீர் தரும் திட்டம் என்று வீராணம் திட்டத்தைத் தொடங்கி கருணாநிதி ஆட்சியில் மக்கள் பணம் பகற்கொள்ளை அடிக்கப்பட்டதும் இறுதியில் அத்திட்டம் கைவிடப்பட்டதும் தெரிந்ததே. அத்திட்டத்துக்கு பலகோடி ரூபாய் செலவில் வாங்கிய குழாய்கள் எல்லாம் வீணாயின.

தற்போது காவிரியிலிருந்து சென்னைக்கு குடிநீர் தரும் திட்டத்தைக் கழக அரசு பரிசீலித்து வருகிறது. சேலம் மாவட்டம் ஜேடர் பாளையத்தில் காவிரியிலிருந்து தண்ணீர் எடுத்து தொழுதூர், சேத்தியா தோப்பு, பண்ருட்டி வழியாகக் கொண்டு வரும் திட்டம் இது. சுமார் 500 கிலோ மீட்டர் தூரம் இருந்து நகருக்கு தண்ணீர் கொண்டு வரப்படுகிறது.

இத்திட்டத்தின் மூலம் நகருக்கு தற்போது சப்ளை செய்யப்படும் குடிநீரை விட 4 மடங்கு அதிகம் விநியோகிக்கப்படும்.

அடுத்த முப்பது நாற்பது ஆண்டு காலத்தில் உள்ள மக்கள் தொகைக்கு ஏற்ப தொலை நோக்குடன் இத்திட்டத்தை கழகஅரசு பரிசீலிக்கிறது.

## கருணாநிதியாரின் திருப்பார்வைக்கு...!

இன்றைக்கு நடப்பது என்ன? காந்தி சொன்னது போல அழகான பெண்கள் கூட அல்ல-நகைகள் எதுவும் அணியாமல் பகல் நேரத்தில் கூட- ஒரு பெண் தன் கிராமத்திலே கூட பாதுகாப்பாக நடமாட முடியவில்லை.

-கருணாநிதி

ராமநாதபுரம் மாவட்டம் திருப்பத்தூரை அடுத்த முறையூர் கிராமத்தில் மாடு மேய்த்துக் கொண்டிருந்த 10 வயது சிறுமியைக் கற்பழித்ததாக உள்ள வழக்கு தொடர்பாக திமுக ஆசாமி கருப்பையா கோர்ட்டில் சரணடைந்தார்.

-செய்தி

## ராமநாதபுரத்தில் மாபெரும் கழக ஊர்வலம்

ராமநாதபுரம், ஆக. 30-வாக்காள பெருமக்களுக்கு நன்றி தெரிவிக்கும் வகையில் ராமநாதபுரத்தில் மாபெரும் கழக ஊர்வலமும் பொதுக்கூட்டமும் நடைபெற்றது.

ராமநாதபுரம் அரண்மனை முன்பிருந்து ஊர்வலம் புறப்பட்டது

அலங்கரிக்கப் பட்ட யானைமுன்செல்ல இரண்டு குதிரைகளில் கழகத் தோழர்கள் கொடியுடன் வந்தனர்

தொடர்ந்து ஆயிரக்கணக்கான கழகத்தோழர்கள் அணி வகுத்து வந்தனர்.

பொ அன்பழகன் எம் பி டி ராமசாமி எம் எல் ஏ உட்பட சட்டமன்ற உறுப்பினர்கள் அலங்கரிக்கப்பட்ட ஜீப்பில் அழைத்து வரப்பட்டனர்.

ஊர்வலத்தில் கரகம், குறவன் குறத்தி நடனம் சிலம்பாட்டம் முதலியனவும் இடம் பெற்றன.

ஊர்வலம் நகரின் முக்கியவீதிகள் வழியாகசுற்றி வந்து அரண்மனை முன்பு முடிந்தது. அங்கு பொதுக்கூட்டம் நடைபெற்றது.

கூட்டத்திற்கு ஏ. துரைராசு தலைமை வகித்தார்.

பொ. அன்பழகன் எம்பி சிறப்புரையாற்றினார்.

கழக சட்டமன்ற உறுப்பினர்கள் டி. ராமசாமி, சத்தியமூர்த்தி, ஆர் தவசி எம் பிச்சை, அங்குச்சாமி, தனிக்கொடித்தேவர் (பார்வர்டு பிளாக்) கே. பாரமலை (தமிழ்நாடு காமராஜ் காங்கிரஸ்) எம் எஸ் சிவசாமி (இந்திய கம்யூனிஸ்ட்) ஆகியோர் பேசினர்.

மற்றும் முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் கூத்தக்குடி சண்முகம் டாக்டர் ஜி. தேவராம்சம் (கா கா தே கா) ஆகியோரும் பேசினர்.

*

ஜெ சி டி பிரபாகரன் எம். எல். ஏ.

## தொகுதி மக்களைச் சந்திக்கிறார்

சென்னை, ஆக. 30-வில்லிவாக்கம் தொகுதி கழக சட்டமன்ற உறுப்பினர் ஜெ சி டி பிரபாகரன் இம்மாதம் 31-ந் தேதி தொகுதி மக்களைச் சந்திக்கிறார்.

விருகம்பாக்கம் நெசப்பாக்கம் அய்யாவுபுரம், மேற்கு கே கே நகர் ஆகிய பகுதிகளுக்கு சென்று தொகுதி மக்களைச் சந்திக்கிறார்.



திருச்சி ராஜன் செண்டருக்கு அக்ரோ இண்டஸ்ட்ரீஸ் தலைவர் லியாகத் அலிகான் சென்று பார்வையிட்டார்.

## திருச்சியில் நடந்த மருத்துவர்கள் ஸ்டிரைக் வாபஸ்

திருச்சி, ஆக. 30-திருச்சியில் நடந்த மருத்துவர்கள் வேலைநிறுத்தம் வாபஸ் பெறப்பட்டது.

திருச்சி அரசினர் தலைமை மருத்துவமனையில் மருத்துவர்களும் இதர ஊழியர்களும் தொடர்ந்து நடத்தி வந்த வேலை நிறுத்தம் வாபஸ் பெறப்பட்டது.

முதல்வர் புரட்சித் தலைவரின் வேண்டுகோளை ஏற்று வேலை நிறுத்தம் வாபஸ் பெறப்பட்டது.

திருச்சியிலிருந்து ஒரு டாக்டர் மாற்றல் செய்யப்பட்டதை தொடர்ந்து வேலை நிறுத்தம் செய்யப்பட்டது தெரிந்ததே.

### அரியலூர் கல்லூரி

## கழக மாணவர் வெற்றி

அரியலூர், ஆக. 30-அரியலூர் கழக கல்லூரி பேரவைத் தேர்தலில் போட்டியிட்ட கழக மாணவர்கள் எஸ் கோவிந்தன் (தலைவர்) கே ஆர் வேலாயுதம் (செயலாளர்) ஆர் மதியழகன (கவின்கலை-இணை செயலாளர்) ஆகியோர் வெற்றி பெற்றனர்.

### 65-வது வட்ட அமைப்பாளர்

## ஜெயராமனை தாக்க தி.மு.க. வினர் முயற்சி

சென்னை, ஆக. 30 சென்னை 65வது வட்ட கழகஅமைப்பாளர் இரா. ஜெயராமனை தி. மு. க. காலிகள் தாக்க முயற்சித்தனர்.

ஜெயராமன் வீட்டில்இல்லாத நேரத்தில் அவரது வீட்டிற்குள் புகுந்து கொண்டு ரகளை செய்தனர் சோடாபாட்டில்களை வீசி வன்முறை வெறியாட்டத்தில் ஈடுபட்டனர்.

வீட்டிலிருந்தவர்களை தகாத வார்த்தைகளால் திட்டினர் இதைத்தட்டிக் கேட்ட ஜெயராமனின் மகனையும் திமுக காலிகள் கத்தியால் தாக்கினர். கையில் படுகாயமடைந்த அவர் மருத்துவமனையில் தங்கி சிகிச்சைபெற்றார்.

இது சம்பந்தமாக கழக தோழர்கள் காவல் நிலையத்தில் புகார் செய்துள்ளனர்.

*

### தேவதானப் பட்டியில்

## கழக வெற்றி விழா கூட்டம்

மதுரை, ஆக. 30-மதுரை தேவதானப்பட்டியில்கழக வெற்றி விழாப் பொதுக்கூட்டம் எம். எம். மாரிமுத்து தலைமையில் பூமிநாதன் முன்னிலையில் நடைபெற்றது. கூட்டத்தில் அமைச்சர் ராஜா முகமது, கோபாலகிருஷ்ணன் எம். எல். ஏ., மற்றும் பலர் பேசினர். அப்போது தேவதானப்பட்டி இந்திய முஸ்லிம் லீக்கின் செயலாளரும் மாநில பொதுக்குழு உறுப்பினருமான ஏ எம இப்ராகிம் அமைச்சர் ராஜா முகமது முன்னிலையில் கழகத்தில் இணைந்தார்.

*

### ராஜபாளையம் 21வதுவட்டம்சார்பில்

## நன்றி அறிவிப்பு கூட்டம்

ராஜபாளையம், ஆக 30. ராஜபாளையம் 21-வதுவட்டம்சார்பாக வாக்காளர் நன்றி அறிவிப்பு கூட்டம் அடுத்த மாதம் (செப்டம்பர்) 3ந்தேதபுதன்கிழமை 7மணிக்கு வ மு மாரிமுத்து தலைமையில் கு பரமகுரு முன்னிலையில் என் எஸ் கே திடலில் நடைபெறுகிறது. இக்கூட்டத்தில் காடுவெட்டி கண்ணப்பன் எம்எல் சி. மொக்கையன், எம்எல்ஏ மா குருசாமி, முகவூர் பெ இரத்தினம், கோ பூராமச்சந்திரன், அய்யாதுரை, சவகுருபாக்கியம் சஞ்சீவிநாதன் ஆகியோர் கலந்து கொண்டு பேசுகின்றனர். கூட்ட முடிவில் செல்லையா நம்பினர் குழுவினரின் கலா நிகழ்ச்சி நடைபெறும்.

*

## உடற்பயிற்சி ஆசிரியைகட்கு சிறப்பு ஊதியம்

சென்னை, ஆக. 30-இதுவரையிலும் 'ஹையர் செகண்டரி' பள்ளியில் பணிபுரியும் உடற்பயிற்சி ஆசிரியர்களுக்கு ரூ. 25 சிறப்பு ஊதியமாக அரசினரால் கொடுக்கப்பட்டுவருகிறது"

இப்போது பள்ளிக்கல்வி இயக்குனரின் பரிந்துரையின் அடிப்படையில் மாணவ-மாணவியர் பயிலும் இணைக்கல்வி ஹையர் செகண்டரி பள்ளிகளில் பணிபுரியும் பெண் உடற்பயிற்சி ஆசிரியைகளுக்கும் சிறப்பு ஊதியம் ரூ. 25 வழங்க அரசு ஆணையிட்டுள்ளது.



முதல்வர் புரட்சித்தலைவர் முன்னிலையில் தேவகோட்டை ஜனதா பிரமுகர் மாணிக்கம் என்கிற சவுரி முத்து உடையார் கழகத்தில் இணைந்தார். அங்குசாமி எம் எல் ஏ உடனிருந்தார்.

## கடனை கொடுக்காதே என்று நிலமுதலைகள் பிரச்சாரம் செய்வதா?

### அரங்கராசன் எம். எல். ஏ. கண்டனம்

உப்பிலியாபுரம், ஆக. 30- விவசாய கடனைதிருப்பிகொடுக்காதீர்கள் என்று நிலமுதலைகளே பிரச்சாரம் செய்து வருகிறார்கள் என்று வே அரங்கராசன் எம் எல் ஏ கூறினார்.

உப்பிலியாபுரம்தொகுதி நரசிங்கபுரம் கூட்டுறவுச் சங்க கிடங்கு கட்டிடத் திறப்பு விழா தவிட்டுபெட்டி பஞ்சாயத்து யூனியன் பள்ளி கட்டிட திறப்பு விழா, துறையூர் நகராட்சி அண்ணா பேருந்து நிலைய விஸ்தரிப்பு அடிக்கல் நாட்டு விழா ஆகியவற்றில் அரங்கராசன் எம் எல் ஏ, கலந்துகொண்டார்.

துறையூர் பொதுக்கூட்டத்தில அவர் பேசுகையில் கூறியதாவது:

தமிழக ஏழை - எளிய விவசாயிகள் நலனில் முதல்வர் புரட்சித்தலைவர் அக்கறைகொண்டு 5 ஏக்கருக்கு குறைவாக உள்ள விவசாயிகள் பயன்பெறும் பொருட்டு இதுவரை 100 கோடி ரூபாய் கடனைத்தள்ளுபடி செய்துள்ளார்.

இந்தியாவிலேயே 100 கோடி ரூபாய் அளவுகடனை தள்ளுபடி செய்துள்ளது முதலவர் புரட்சித் தலைவரின் தமிழக அரசுதான்.

### குடிநீர் திட்டம்

ஏழை எளிய விவசாயிகளின் விளைபொருட்களுக்கு அதிகவிலை கிடைக்கும் வகையில் எல்லா கிராமங்களிலும் கிடங்கு கட்டுவதற்கு அரசு உத்தரவிட்டுள்ளது.

துறையூர் நகராட்சியின் குடிநீர் பிரச்சினை நீண்ட காலமாக தீர்த்து வைக்கப்படாமல் இருந்துவருகிறது

விரைவில் தீர்த்து வைக்க குடிநீர் கொண்டு வரும் திட்டம் நிறைவேற்றப்படும்.

உண்மையான ஏழை விவசாயிகள் கடன் தள்ளுபடியை மிகவும் பாராட்டுகின்றார்கள் ஆனால் சிலர் வாங்கிய கடனை கட்டாதீர்கள் என்று சொல்லி வருகிறார்கள்.

இதை மக்கள்சிந்தித்துப் பார்க்கவேண்டும். ஒரு முதலாளி டிராக்டர் வாங்கி கடன் பெற்றுள்ளார். அந்த டிராக்டரை வாடகைக்கு விட்டு வாங்கிய அளவிற்கு சம்பாதித்துவிட்டார். இன்றைய தினம் விலை ஏற்றத்தின் காரணமாக டிராக்டரை வாங்கிய விலைக்கு விற்று லாபம் அடைகிறார்கள்.

### ஏழைகளை தூண்டுவதா?

இப்படிப்பட்டவர்களின் கடனை தள்ளுபடி செய்ய வேண்டியது அவசியம் தானா என்பதை சிந்தித்து பார்க்கவேண்டும்.

சில பெரும் பணக்காரர்கள் தான்பெற்ற எல்லாக் கடன்களையும் தள்ளுபடி செய்யவேண்டும் என்பதற்காக ஏழைஎளிய விவசாயிகளை கருவியாகப் பயன்படுத்தி போராட்டம் என்ற பெயரில் சிலசமூகவிரோத செயல்களை செய்கிறார்கள்.

அப்படிப்பட்டவர்களுக்கு துணைபோகக்கூடாது.

இவ்வாறு அரங்கராசன் கூறினார்.



Published by K. Ravindran on behalf of Thangamani Publications. 275, Avvai Shanmugam salai, Madras-14 and printed by him at Print House, 1, First Main Road, United India Colony, Madras-24. Editor: E. PARASURAMAN.

# அண்ணா



245 லட்சம் ரூபாயில்

## நிலமற்றோருக்கு உதவ புதுதிட்டம் காளிமுத்து தகவல்

திருச்சூர், ஆக. 30- நிலமற்ற விவசாயிகளுக்கு உதவ 245 லட்சம் ரூபாயில் திட்டம் தீட்டப்பட்டிருப்பதாக அமைச்சர் காளிமுத்து கூறினர்.



இந்திய வேளாண்மை ஆராய்ச்சிக் கழகத்தின் 8வது மண்டலக் குழுவின் கூட்டம் திருச்சூர் அருகில் உள்ள கேரள வேளாண்மைப் பல்கலைக்கழகத்தில் நடைபெற்றது.

கழகத்தின் டைரக்டர் ஜெனரல் டாக்டர் கௌதம் தலைமை தாங்கினார்.

தமிழகவிவசாய அமைச்சர் கா. காளிமுத்து கருநாடக தோட்டக்கலை அமைச்சர் எங்கடப்பா, பாண்டிச்சேரி விவசாய அமைச்சர் வி எம் சி சிவக்குமார் மற்றும் தமிழக கருநாடக கேரள வேளாண்மை பல்கலைக்கழகங்களின் துணை வேந்தர்களும் விவசாய விஞ்ஞானிகளும் 8வது மண்டலக் குழுவின் உறுப்பினர்களும் கூட்டத்தில் கலந்துகொண்டனர்.

அமைச்சர் கா. காளிமுத்து விவாதத்தைத் துவக்கி வைத்துப் பேசியதாவது:

புதுக்கோட்டை மாவட்டம் வம்பனில் தேசிய பருப்பு வகை ஆராய்ச்சி மையம் அமைக்க வேண்டுமென்று 2ஆண்டுகாலமாக இந்திய வேளாண்மை ஆராய்ச்சிக் கழகத்தைக் கேட்டு வருகிறோம்.

அதை உடனடியாக அனுமதிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

தமிழ்நாட்டில் பருப்பு வகைகளையும் எண்ணெய் வித்துக்களையும் அதிக அளவில் உற்பத்தி செய்ய தமிழ்நாடு அரசு பல திட்டங்களை நிறைவேற்றி வருகிறது.

நிலமற்ற விவசாயத் தொழிலாளர்களுக்கு உதவுவதற்காக ரூ 245.21 லட்சத்தில் 2 திட்டங்கள் தீட்டப்பட்டுள்ளன.

செங்கல்பட்டு, கோவை மாவட்டங்களில் இத்திட்டங்கள் செயல்படுத்தப்பட இருக்கின்றன. நிலமற்ற ஏராளமான விவசாயத் தொழிலாளர்கள் பயனடைய இருப்பதால் உடனடியாக இத்திட்டங்களை அனுமதிக்க வேண்டுகிறேன்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து பேசினார்.

விவாதமுடிவில் இந்திய வேளாண்மை ஆராய்ச்சிக் கழகடைரக்டர் ஜெனரல் டாக்டர் கௌதம் பேசுகையில்" அமைச்சரின் கோரிக்கைகளை கழகம்ஆய்வு செய்து அனுமதிவழங்கும் என்றார் அமைச்சருடன் வேளாண்மைத் துறை இயக்குனர் எஸ்,ஏ. சுப்ரமணி கூட்டத்தில்கலந்து கொண்டார்.

விளாத்திகுளம்

## மகளிர்பிரிவு கூட்டம்

நெல்லை, ஆக. 30 நெல்லை மாவட்ட விளாத்தி குளம் வட்டம் புதூர் ஊராட்சி ஒன்றிய போரூர் கிளையின் 5,6,7 வார்டுகளின் மகளிர் பிரிவுக் கூட்டம் கங்கம்மாள் தலைமையில் நடைபெற்றது மகளிர் பிரிவு தொகுதி அமைப்பாளர் டி ஆர் அம்மாள் இக்கூட்டத்தில் கலந்து கொண்டு சிறப்புரை யாற்றினர். கூட்ட முடிவில் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டது.

## சாப்பாட்டு தட்டு அன்பளிப்பு

பிள்ளைப்பாக்கம் கிளை அமைப்பாளர் கே,மூர்த்தி பிள்ளைப்பாக்கம் ஆரம்ப பள்ளியில் படிக்கும் மாணவ மாணவிகளுக்கு இலவசமாக அளித்த மதிய உணவிற்கான சாப்பாட்டு தட்டு மற்றும் டம்ளர்களை அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன் பள்ளிக்கூட பிள்ளைகளுக்கு வழங்கினர் படத்தில் அமைச்சருடன் மண்ணடி கிருஷ்ணமூர்த்தியும், அமைப்பாளர் மூர்த்தியும் கிளைத்தலைவர் நடராசனும் உள்ளனர்.





பொதுச் செயலாளர் ப. உ. ச. முன்னிலையில் டி. பி. தங்கவேலு கழகத்தில் இணைந்தார். வஞ்சூர்வில்வம், ஜெயராமன், அனுமந்தன் ஆகியோர் உடனிருந்தனர்.

கழக அரசு அளித்த ஊதிய உயர்வு:

# போக்குவரத்து தொழிலாளர்கள் சங்கங்கள் பாராட்டு

சென்னை, ஆக. 30 - போக்குவரத்துத் தொழிலாளர்களுக்கு ஊதிய உயர்வு அளித்துள்ள கழக அரசுக்கு, பல்வேறு போக்குவரத்துக் கழகங்களைச் சேர்ந்த தொழிலாளர் சங்கங்களும் பாராட்டும் நன்றியும் தெரிவித்துள்ளன.

தமிழக அரசைச்சேர்ந்த பல்வேறு போக்குவரத்துக் கழகத் தொழிலாளர்களுக்கும் புரட்சித்தலைவரின் கழக அரசு 115 ரூபாய் வரை ஊதிய உயர்வு அளித்துள்ளது தெரிந்ததே.

பல்லவன் போக்குவரத்துக் கழக அச்சக பொதுத் தொழிலாளர் சங்கச் செயலாளர் ஜி திருநாவுக்கரசு விடுத்துள்ள அறிக்கையில் தெரிவித்திருப்பதாவது:-

"போக்குவரத்து ஊழியர்களுக்கு, இதுவரையில் வழங்காத அளவு ஊதிய உயர்வு அளித்துள்ள தமிழக அரசிற்கு நன்றி தெரிவித்துக் கொள்ளுகிறோம். அரசுக்கு நன்றிதெரிவித்து சங்கக் கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டுள்ளது.

இவ்வாறுதிருநாவுக்கரசு தெரிவித்துள்ளார்.

## அண்ணா சங்கம்

திருவள்ளுவர் போக்குவரத்துக்கழக அண்ணா பொதுத்தொழிலாளர் சங்க தலைவர் சிவபெருமாள், மற்றும் செயலாளர் எம் பன்னீர் செல்வம் விடுத்துள்ள அறிக்கையில் தெரிவித்திருப்பதாவது:-

'வரலாறு காணாதவகையில் போக்குவரத்துத் தொழிலாளர்களுக்கு ஊதிய உயர்வு அளித்துள்ள முதல்வர் அவர்களுக்கும், போக்குவரத்துத் துறை அமைச்சருக்கும், ஒப்பந்தம் ஏற்பட உறுதுணையாகஇருந்தபேரவை பொதுச் செயலாளருக்கும் எங்கள் நன்றியையும், பாராட்டையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம். இவ்வாறு சிவபெருமாள், பன்னீர்செல்வம் ஆகியோர் தெரிவித்துள்ளனர்.

## சிறிய வாகன ஓட்டுநர்கள் சங்கம்

பல்லவன் போக்கு வரத்துக்கழகம் சிறிய வாகன ஓட்டுனர்கள் சங்கச் செயலாளர் பி.ஜி. கிருஷ்ணமூர்த்தி விடுத்துள்ள அறிக்கையில் தெரிவித்துள்ளதாவது:

அனைத்து போக்கு வரத்துக் கழக தொழிலாளர் அனைவருக்கும் மனத்திருப்தி அளிக்கும் வகையில்சம்பளஉயர்வுஅளித்து மனநிறைவு அடையச் செய்த தமிழக முதல்வர் அவர்கட்கும் போக்குவரத்து அமைச்சருக்கும் அனைத்து நிர்வாக இயக்குநர்களுக்கும் பொதுச் சங்க தலைவர்களுக்கும் சிறு வாகன ஓட்டுநர் சங்கத்தின் சார்பில் எங்களது இதய பூர்வமான மகிழ்ச்சியையும் நன்றியையும்தெரிவித்துக் கொள்கிறோம். மற்றும் தொழிலாளர் நல உதவி ஆணையாளர் அவர்கட்கும் எங்களது சங்கத்தின் சார்பில் நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம்

இவ்வாறு கிருஷ்ணமூர்த்தி தெரிவித்துள்ளார்

## பாண்டியன் கழக தொழிலாளர்

போக்குவரத்துக் கழக ஊழியர்களுக்கான ஊதிய உயர்வு பிரச்சினையை சுமுகமான முறையில் தீர்த்து வைத்த மக்கு கழக பொதுச்செயலாளர், ப.உ.ச. அண்ணாதொழிற் சங்கப் பேரவை பொதுச் செயலாளர் வை,பெருமாள்,போக்கு வரத்து அமைச்சர் எஸ்.முத்துசாமி பேரவைத் துணைத் தலைவர் எஸ்,நம்பிராஜன் ஆகியோருக்கு பாண்டியன் போக்குவரத்துக் கழக அண்ணா தொழிலாளர் சங்க பொதுச்செயலாளர் சி.ராமமூர்த்தி. பொருளாளர் ஜி. பத்மநாபன் ஆகியோர் மாலை அணிவித்து நன்றிதெரிவித்தனர்

## பெரியார் போக்குவரத்து கழகம்

தந்தை பெரியார் போக்குவரத்துக்கழக அண்ணா தொழிலாளர் சங்க பொதுச் செயலாளர் என் கே ரங்கநாதன்விடுத்துள்ள அறிக்கையில் தெரிவித்திருப்பதாவது:-

தந்தை பெரியார் போக்குவரத்துக் கழக அண்ணா தொழிற்சங்க தலைவர் கே. அப்துல்அஜீஸ் பொதுச் செயலாளர் என், கே. ரங்கநாதன், பொருளாளர் புருசோத்தமன் துணைப்பொதுச் செயலாளர் ஜி. தவசிலன் ஆகியோர் கூட்டு அறிக்கையில் கூறி இருப்பதாவது

தமிழக போக்குவரத்துக் கழக ஊழியர்களுக்கு வரலாறு காணாத வகையில் ஊதியஉயர்வு அளித்த தமிழக முதல்வர் புரட்சித் தலைவருக்கும் போக்குவரத்து அமைச்சர் எஸ். முத்துசாமிக்கும் உறுதுணையாக இருந்த தொழிலாளர் பிரிவு செயலாளர் வை. பெருமாள் ஆகியோருக்கும் எங்கள் இதயங்கனிந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

இவ்வாறு ரங்கநாதன் தெரிவித்துள்ளார்.

## கட்டபொம்மன் ஊழியர்

கட்டபொம்மன்போக்குவரத்துக்கழக அண்ணா நிர்வாகப் பணியாளர் சங்கத் தலைவர் எஸ் நம்பிராஜன், பொதுச் செயலாளர் பி. எம். ஜமாலுதீன், செயலாளர் ஆர். சாம் வின்ஸ்டன், அண்ணா நிர்வாகப் பணியாளர் சங்கத் தலைவர் கோ. முருகேசன் செயலாளர்சந்திரபிரகாஷ் ஒய் வேதமணி ஆகியோர் போக்குவரத்து அமைச்சர் எஸ் முத்துசாமிக்கும் தொழிற் சங்க பிரிவு செயலாளர் வை. பெருமாள் ஆகியோருக்கு மாலையணிவித்து ஊதிய உயர்வுக்கு நன்றியை தெரிவித்துக் கொண்டனர்.

## மறைவு

சேப்பாக்கம்மகளிர் அணி அமைப்பாளர் கண்ணம்மாள் ஆறுமுகத்தின் இரண்டாவது மகன் மோல்டர் மணி என்கிற ஆறுமுகம் நேற்று (29ந் தேதி) இரவு மரணம் அடைந்தார். அவர் உடல்தகனம் இன்று (30ந் தேதி) மாலை 6மணி அளவில் ஐ ஜி ஆபீஸ் அருகில் உள்ள கிருஷ்ணாம் பேட்டை மயானத்தில் நடைபெறுகிறது.

## சாகுபுரம் கெமிக்கல்ஸ் அண்ணா சங்க நிர்வாக அமைப்பு

திருச்செந்தூர், ஆக. 30- சாகுபுரம் கெமிக்கல்ஸ் அண்ணா தொழிலாளர் சங்க செயற்குழு உறுப்பினர் கூட்டம் ஆத்தூரில் பேரவை துணைத்தலைவர் எஸ் நம்பிராசன் தலைமையில் நடைபெற்றது.

சங்கத்தலைவரும், செயலாளரும்பொறுப்பில் இருந்து விலகிக் கொண்டபடியால் இடைக் காலத்திற்கு அந்த பொறுப்பை நிர்வகிப்பது பற்றி விவாதிக்கப்பட்டது.

அடுத்த ஆண்டு நிர்வாகிகள் தேர்தல் நடைபெறும் வரை பேரவை பிரதிநிதிகளாக செயல்பட்டு வந்த ராதாகிருஷ்ணன் தலைவராகவும் புகாரி செயலாளராகவும் பொறுப்பை கவனித்து வருவார்கள் என்றும் பேரவை பிரதிநிதிகளாகபாஸ்கரனும்கோபாலும் பணியாற்றுவார்கள் என்றும் முடிவெடுத்து அறிவிக்கப்பட்டது.

குறவன்பாளையத்தில்

## கழக வெற்றி விழா கூட்டம்

கோபி, ஆக. 30- கோபி மாவட்டம் குறவன் பாளைய கழகக் கிளை சார்பாகவெற்றிவிழா கூட்டம் இம்மாதம் 31ந் தேதி (ஞாயிறு) மாலை 7 மணி அளவில் பெரிய குறவன் பாளையம் அரிஜன காலனியில் குமாரசாமிகவுண்டர் தலைமையில் நடைபெறுகிறது.

இக்கூட்டத்தில் சி சின்னசாமி எம் பி, கே ஏ செங்கோட்டையன் எம் எல் ஏ வி எம் பழனிசாமி, இ ஏ மணி, வி டி பெரியசாமி வி எம் சிதம்பரம் மற்றும் பலர் கலந்து கொண்டு பேசுகின்றனர்.

## கோழி வளர்ப்பு நிறுவன சங்க நிர்வாகிகள்

சென்னை, ஆக. 30-தமிழ்நாடு கோழி வளர்ப்பு நிறுவனத் தொழிலாளர் சங்கத்தின் பொது உறுப்பினர்கள் கூட்டம் செ. ரா. சீனிவாசன் தலைமையில் நடைபெற்றது. அப்போது கீழ்கண்டவர்கள் நிர்வாகிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தலைவராக செ. ரா. சீனிவாசன் துணை தலைவர்களாக நா. ஜீவரத்தினம், என். சிவன்பிள்ளை, செயலாளராக ப. பிச்சுமணி, இணை செயலாளர்களாக அ. சுப்பிரமணி, தா. துரைசாமி, பொருளாளராக ஆ. முனுசாமி ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

இச்சங்கத்தை அண்ணா தொழிற்சங்கப் பேரவையுடன் இணைக்க பொதுக்குழு ஏகமனதாக தீர்மானம் நிறைவேற்றியது.

## சாத்தூரில் கழகமன்ற நிறைவு விழா

சாத்தூர், ஆக.30 சாத்தூர் தொகுதி6-வதுவட்ட கழக மன்ற 3-வது ஆண்டு நிறைவு விழா பொதுக்கூட்டம் சாத்தூர் அண்ணா திடலில் பி ராமசாமி தலைமையில் நடைபெற்றது மன்ற செயலர் சௌந்திரபாண்டியன் அனைவரையும் வரவேற்று பேசினார் நகர அவைத்தலைவர் எஸ் பி வேலாயுதம் நகர செயலர் வி ரங்கசாமி வேம்புசந்திரன் நெல்லை ஜான் பிரிட்டோ பாலாஜி ஆகியோர் இத்திட்டத்தில் கலந்து கொண்டு சிறப்புரையாற்றினர்.





## காலமானர்

ஆர். வீரராகவன்
(பங்குதாரர்)
K. R. BROS & YENNAR AGENCIES
எண். 7, ஸ்ராட்டன் முத்தையா முதலி தெரு,
சென்னை - 600 001
28.8.80 அன்று திடீரென்று காலமானர் என்பதனை ஆழ்ந்த வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம்.
போன் - 662369 & 35165
அன்னார் பிரிவால் வாடும் குடும்பம் மற்றும் நண்பர்கள்.